களும் கேட்டுப் பெறுகிறார்கள். இஃதன்று வாழ்க்கை! இஃதன்று மக்கள் நலங்கருதி இயற்றும் வாழ்க்கை!

வாழ்க்கை, தொண்டைக் குறிக்கோளாக உடையது; தொண்டைப் பயனாகவுடைத்து. இக்குறிக்கோளைத் திருக்குறள் "ஒப்புரவு" என்று கூறுகிறது. எந்த ஒரு செயலும், செயலளவில் தரும் பயனைவிடச் செயல் செய்யும் மனப் பாங்கு—உணர்வு ஆகியவற்றின் அடிப்படையிலேயே பயனை நிர்ணயிருக்கின்றது; தரத்தைக் காட்டுகின்றது. ஒருவருக்கொருவர் உதவி செய்து கொள்ளுதல் மட்டும் போதாது. உதவிசெய்தல் எதற்காக? தற்காப்புக்காகவும் இலாபத்துக்காகவும் கூட உதவி செய்யலாமே! சொல்லப் போனால் இத்தகைய உதவிகள் ஒருவகையில் வாணிகம் போலத்தான்! அதே உதவியைக் கடப்பாட்டுணர்வுடன் உதவி பெறுபவரை உறவுப் பாங்கில் எண்ணி உரிமை யுடையவராக நினைந்து செய்தற்குப் பதில் அவரே எடுத்துக் கொள்ளும் உரிமையை வழங்குதல் ஒப்புரவாகும்.

ஒப்புரவில், பெறுபவர் அந்நியரல்லர்; உறவினர்; கடமையும் உரிமையுமுடையவர். ஒப்புரவு நெறி சார்ந்த வாழ்க்கையில் வள்ளல்கள் இல்லை! கொடுப்பவரும் இல்லை! வாங்குபவரும் இல்லை! ஒப்புரவு நெறி வாழ்க்கை யில் உடைமைச் சார்பு இறுக்கமான தனியுடைமையாக இல்லாமல் அறநெறி சார்ந்த குறிக்கோளுடைய உடைமை யாக அமையும்.

ஒப்புரவில், ஈதல்—ஏற்றல் வழி அமையும் புரவலர்—இரவலர் உறவு இல்லை. ஒப்புரவு நெறி சார்ந்த வாழ்க்கை உரிமையும் கடமையும் உடைய வாழ்வு முறையாக அமைவதால் கடமைகள், உரிமைகளை வழங்குகின்றன.

ஊருணி, தேவைப்படுவோர் அனைவரும் தண்ணீர் எடுத்துக் குடிப்பதற்கு உரிமையுடையது. அதைத் தடுப்பார் யாருமில்லை. ஊருணி, தண்ணீர் எடுத்து அனுபவிக்கப் படுவது. பழுத்த பயன் மரத்தின் கனிகளை அனைவரும் எடுத்து அனுபவிக்கலாம். பயன் மரம் பழங்களைத் தருவது. உரிமை எல்லைகளைக் கவனத்தில்கொண்டல்ல. மருந்து மரம் உதவிசெய்தலில் தன்னை மறந்த நிலையில் பயன்பாட்டு நிலை ஒன்றேகாணப் பெறுகிறது. நோயுடை யார் எல்லாரும் பயன்படுத்தலாம். ஒப்புரவை விளக்கப் பயன்படுத்தியுள்ள இந்த உவமைகள் இன்றும் எடுத்தும், பறித்தும், வெட்டியும் பயன்படுத்துவனவாகவே அமைந் துள்ளன. ஆயினும், ஊருணி, பயன் மரம், மருந்து மரம் ஆகியன மனிதர்கள் தம் படைப்பாற்றலைக் கொண்டு படைத்தவை என்பதை நிறைவிற்கொள்க!

ஊருணியை அகழ்ந்தவன் மனிதன்! அந்த ஊருணியில் தண்ணீரைக் கொணர்ந்து தேக்கியது யார்? மனிதர்தாம்: ஊருணியை அமைத்துத் தேக்கும் கடமை பொறுப்புணர் வுடன்—கூட்டுப் பொறுப்புடன் செய்யப் பெற்றால்தான் ஊருணியில் தண்ணீர் நிறையும். பலரும் எடுத்துக் குடிக்கலாம். பயன்தரு மரங்களை வளர்த்தால்தான் கனிகள் கிடைக்கும். தின்று அனுபவிக்கலாம். இங்கும் மனிதனின் படைப்பைத் தொடர்ந்துதான் நுகர்வு வருகிறது. ஒப்புரவு வருகிறது. மருந்து மரங்களையும் நட்டு வளர்த்தால்தான் மருந்து மரத்துப் பட்டையைச் சீவிப் பயன்படுத்தலாம்; பயன்படுத்த முடியும். ஆதலால், ஒப்புரவாண்மையுடன் வாழ முதல் தேவை உழைப்பு! கூட்டு உழைப்பு! பொருள்களைப் படைக்கும் கடமைகள் நிகழாத வழியில் ஒப்புரவு வாழ்வு மலராது. கடமைகள் இயற்றப்பெறாமல் ஒப்புரவு தோன்றாது. ஓரோவழி தோன்றினாலும் நிலைத்து நில்லாது. கடமை களில்—பொருள் செய்தலில் ஒவ்வொருவரும் கூட்டு

உழைப்பில் ஈடுபட்டால்தான் ஒப்புரவு நெறி தோன்றும்; வளரும்; நிலைத்து நிற்கும்.

ஒப்புரவு நெறியில் இறுக்கமான தனியுடைமை உணர்வு இல்லை என்பதே சிறப்பு. அதேபோழ்து உரிய கடமைகளைப் பொறுப்புணர்வுடன் செய்யாது உரிமைகளை அனுபவிக்க ஆசைப்படவோ அனுபவிக்கவோ கூடாது. இன்று சோவியத் அடைந்துள்ள தீய அனுபவங்களையும் நமது நாட்டு மக்களின் வாழ்க்கை முறையில் அடைந்து வந்துள்ள தீமைகளையும் எண்ணுக. எழுத்தறிவில்லாதார் 77 சதவிகிதம்! வறுமைக்கோட்டிற்குக் கீழ் உள்ளவர்கள் 58.9 சதவிகிதம். பல நூறாயிரம் பேர் வேலையில்லாமல் தவிப்பு! முடிவாக விளைந்த தீமை பணத்தின் மதிப்பு வீழ்ச்சி!

வாழும் நாள்கள் சில! ஏன் குற்றங்களைச் சுமந்து கொண்டு சோம்பித் திரிந்து வாழ்தல் வேண்டும்? வாய்ப்பேச்சு சோறு போடுமா? படைப்புப் பல படைப் போம்! கூடித் தொழில் செய்வோம்! கூடி உண்போம்! கூடி வாழ்வோம்! எல்லாருக்கும் எல்லாம் என்ற திசைநோக்கி நகர்த்துவோம்! புவியை நடத்துவோம்! பொதுவில் நடத்துவோம்! இதுவே மனித குலத்தின் நல்வாழ்வுக்குரிய ஒப்புரவு நெறி..

  

தமிழ்மாமுனிவர்
தவத்திரு

# குன்றக்குடி அடிகளார் நூல்வரிசை

திருக்குறள்
இலக்கியம்
சமயம்
சமுதாயம்
பொது